Post without pre-payment Licence No. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the people

# புரட்சித்தலைவர் அறிவிப்பு

Regd No. TN - MS [C] 244 Phone: 420212 பக்கம் 4 விலை 60 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 28 11 86 வெள்ளி வெளியூர் 29 11 86 சனி இதழ் 42

## "தெலுங்கு கங்கை திட்டம் பற்றி என்.டி.ராமராவுடன் பேசுவேன்"



### குடிநீர் வழங்க இதுவரை ரூ. 428 கோடி ஒதுக்கிய கழக அரசு

சென்னை, நவ, 28- தெலுங்கு கங்கை திட்டத்தை நிறைவேற்றுவது குறித்து பிரதமருக்கும் ஆந்திர முதல்வருக்கும் கடிதம் எழுதியிருப்பதாக முதல்வர் புரட்சித் தலைவர் அண்ணாநகர் விழாவில் அறிவித்தார். இத்திட்டம் குறித்து ஆந்திர முதல்வர் என். டி. ராமராவுடன் விரைவில் பேசப்போவதாகவும் புரட்சித்தலைவர் கூறினார். கழகம்ஆட்சி போறுப்பை ஏற்றுக் கோண்டபின் குடிநீர் வழங்குவதற்காக இதுவரை ரூ. 428 கோடி செலவிடப்பட்டதாகவும் முதல்வர் குறிப்பிட்டார்.

சென்னை அண்ணா நகரில் 15 கோடி ரூபாய் அளவிறகான குடிநீா வழங்கல் மற்றும் கழிவு நீரகற்று திட்டப் பணிகளைத துவக்கிவைத்து முதல்வர் புரட்சிததலைவர் பொன்னுரை ஆற்றினார்

8 37 மணிககு பேசத் துவஙகிய முதல்வா புரட்சிததலைவா 8.45 மணிக்கு தனது பேச்சை முடித்தாா.

முதல்வர் புாட்சித் தலைவர்பேசியதாவது:-

என்னை வாழ வைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே! என்னை வழி நடத்திச் செல்லும் பெரியோாகளே! என் ரததததன் ரத்தமான உடன் பிறப்புகளே! இந்த அரசு தமிழக மக்களுக்கு பாதுகாககப் பட்ட குடிநீர்வழங்குவதில் தீவிரபபணி ஆறறி வருகிறது.

நாங்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பின் குடிநீர் வழங்குவதற்காகஇதுவரை428 கோடி ரூபாய் செலவு செய்துள்ளோம. அதில் 60 கோடி ரூபாய் சென்னை பெருநகரத்துக்காக மட்டும செலவு செய்யப் பட்டுள்ளது.

வறட்சிகாலங்களில் தண்ணீர் தட்டுப் பாட்டைச் சமாளிகக பல இடங்களிலிருந்து வாகனங்களில் தண்ணீா கொண்டு வந்துவழங்கப் படுகிறது

சென்னை பெருநகருக்குத்தண்ணீர் தாராள மாகக் கிடைக்க ஆநதிர மாநில உதவியுடன் தெலுங்கு கங்கை திட்டம் உருவாசகப்பட்டது

இதற்கான பணிகள் தமிழக எல்லைக்குள தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இந்தத் திட்டச் செயலாக்கம் குறித்து பிரதமருக்கும்' ஆந்திர முதல்வருககும் கடிதம் எழுதி இருக்கிறேன். ஆந்திர முதலவருடன் விரைவில் பேசப்போகிறேன்

சென்னை பெருநகரில் மேலும் பல பகுதிகளுக்கு குடிநா வழங்க திட்டம் போடபபட்டுள்ளது பல இடங்களில கழிவு நீரேற்று நிலையங்கள் உருவாக்கப்பட இருக்கின்றன

இந்தத் திட்டங்களுக்காக சுமார் 15 கோடி ரூபாய் ஒதுக்கப்பட இருக்கிறது.

இந்தப் பணிகளின் முதல் கட்டமாக அண்ணாநகர் மேற்கு மற்றும் வில்லிவாககம பகுதிகளுக்கென குடிநீர் திடடங்கள் மூன்றே முக்கால் கோடி ரூபாய் செலவில் இன்று தொடஙகப்படுகிறது

இவற்றை உங்களுக்கு அாப்பணிப்பதில் நான் மகிழ்சசி அடைகிறேன இந்தத் திட்டங்களினால் நீங்கள் நல்ல பயன் பெறுவீர்கள் என்று வாழ்த்துகிறேன்.

அண்ணா நாமம் வாழ்க!நன்றி வணக்கம்!

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவா பேசினாா.

### ஆளுநர்-முதல்வர் சந்திப்பு

சென்னை. நவ. 28- சென்னையில் ஆளுநர் குரானாவை முதல்வர் புரட்சித் தலைவர் சந்தித்துப் பேசினாா. இருவரும் சுமாா 45 நிமிடம் பேசினார்கள்

முதல்வர் புரட்சித் தலைவர் நேற்று மாலை 6மணிக்கு கிண்டியில்உள்ள கவர்னர் மாளிகைக்குப் போனார்

அங்கு ஆளுநர் குரானா முதல்வர் புரட்சிதலைவரை வரவேற்றாா. இருவரு' தனி அறையில் சந்தித்து 45 நிமிடம் பேசினார்கள்

இந்த சந்திப்பில் ஏதும் முக்கியத்துவம் உண்டா? என்று கவர்னரின் உதவியாளரிடம் நிருபா கேட்டதற்கு "விசேஷம் எதுவும் இல்லை மரியாதையை தெரிவிக்கும் சந்திப்பு தான்' என்று கூறினார்.



சென்னை அண்ணா நகரில் நடைபெற்ற விழாவில் 15 கோடி ரூபாய்க்கான குடிநீர் மற்றும் கழிவுநீரகற்று திட்டப் பணிகளை முதல்வர் புரட்சித் தலைவர் துவங்கி வைத்தார்.

## பேச்சுவார்த்தை மூலம் எல்லை பிரச்சினைகளுக்கு தீர்வு

### கோர்பசேவ் பேட்டி

புதுடெல்லி நவ 28- சீனாவுடன் உறவை மேம்படுத்திக் கொள்வதன் மூலம் இந்தியாவுடனான சோவியத் ரஷ்யாவின் உறவு எந்த விதத்திலும் பாதிக்காது என்று ரஷ்ய தலைவர் கோர்பசேவ் கூறினார் பாகிஸ்தானுடன் இந்தியாவும், சோவியத்நாடும் நல்லுறவை பலப்படுத்திக் கொள்ளவே விரும்புகிறது என்றும் கோர்பசேவ் வலியுறுத்தினார். சோவியத்ரஷ்யதலைவர் கோர்பசேவ் இந்தியாவில் மேற்கொண்ட 4 நாள் சுற்றுப் பயணத்தின் இறுதி நாளானஇன்றுபுதுடெல்லியில் நடைபெற்ற பிரம்மாண்டமான பத்திரிகையாளர் கூட்டத்தில் உரையாற்றினார்.

இந்தியா மற்றும் பல்வேறு நாடுகளைச்சேர்ந்த 500க்கும்மேற்பட்ட செய்தியாளாகள் கேட்ட சரமாரி கேள்விகளுககு கோர்பசேவ் பதிலளித்தார்.

புதுடெல்லியில் உள்ள ஜனாதிபதி மாளிகையின் அசோக் மண்டபத்தில் இந்தக் கூட்டம் நடைபெறறது

கேட்கப்பட்ட பல்வேறு கேள்விகளுக்கு பதில் அளித்து கோர்பசேவ கூறியதாவது:-

இந்திய மக்களின் அன்பையும் பெருந்தன்மையையும் நாங்கள் எப்போதும் மறக்க மாட்டோம். என்னுடைய பயணம் திருப்தியாகவே இருந்தது. இந்திய அரசுக்கு நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

அணுகுண்டு உற்பத்தி அறவே ஒழிக்கப்பட வேண்டும் ஆயுதக் குறைப்பு திட்டம் தீவிரமாக அமல் நடத்தப்பட வேண்டும்.

அண்டை நாடுகளிடையே மட்டும் அல்ல உலக நாடுகளிடையே அமைதி நிலவ வேண்டும் என்பதைத்தான் இந்தியாவும், ரஷ்யாவும் வலியுறுத்தி வருகின்றன.

பாகிஸ்தான் உள்பட அண்டை நாடுகளுடன் பற்றும் பாசத்துடனும் நட்புறவை வளர்த்துக் கொள்ளவே இந்தியா விரும்புகிறது இதைபாகிஸ்தான் நன்கு உணர்ந்து செயல்பட வேண்டும்

பாகிஸ்தான் தனது போர் ஆயுதங்களை அதிகரித்துக் கொண்டு வருகிறது இதை பாகிஸ்தான் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும் இந்தியாவையோ, அண்டை நாடுகளையோ பாதிக்கும் அளவில் அதன் செயல்பாட்டுத் திட்டங்கள் இருக்கக கூடாது;

பாகிஸ்தானுக்கு அமெரிக்காஆயுதஉதவிசெய்வது அண்டை நாடுகளுக்கு ஆபத்தை ஏற்படுத்தவிடக் கூடாது,

சீனாவுடனும் சோவியத் ரஷ்யா தனனுடைய உறவை வளாத்துக கொள்ளவே விரும்புகிறது.

சோவியத் சீன நட்புறவு வலுப்படுவதால் இந்தியாவுடனான சோவியத் நட்புறவு எந்த விதத்திலும் பலவீனமடையாது இது உறுதி.

இந்தியாவுககுச் சொந்தமான ஆயிரக் கணக்கான சதுர மைல் நிலப்பரப்பை சீனா ஆக்கிரமித்து இருப்பதாக கூறப்பட்டது இந்த எல்லைத் தகராறு நீணட நாட்களாகவே இருந்து வருகிறது இதை தீவிரமாகப் பேசி சுமுகமாக தீர்த்துக்கொள்ள வேண்டும்.

சீனா மீண்டும் இந்தியாவைதாககக்கூடும்என்று யாரும் அஞ்ச வேண்டியதில்லை

அப்படி ஒருநிலைமைவந்தால்சோவியத் நாடு பாரபட்சமாகவோ, ஒருதலைபட்சமாகவோ நடந்து கொள்ளாது

இந்தியாவுக்கும் சீனாவுக்கும் இடையேயான பிரச்சினைகளை அமைதியான பேச்சுவார்த்தை மூலம் இரு நாடுகளும் தீர்த்துக் கொள்வதையே ரஷ்யா விரும்புகிறது.

எல்லைப் பிரச்சினைகள் வரலாற்று அடிப்படையிலும்உண்மையான நிலவரங்களின் அடிப்படையி தீர்க்கப்பட வேண்டியவை உலக அமைதிக்குஇரு நாடுகளும்ஒருங்கிணைந்து செயல்படும். இந்தியப் பெருங்கடலில் அமைதி நிலவுவது மிகவும் அவசியம். இதை ஐ நா. சபையும் வலியுறுத்தியிருக்கிறது இந்தியப் பெருங்கடலை பாகிஸ்தானும் பயன்படுத்தி வருகிறது. இந்தியப் பெருங்கடலில் அமைதி நிலவபாகிஸ்தான் பாடுபட வேண்டும்.

பயங்கரவாதத்தையோ அல்லது பயங்கரவாதிகளையே எந்த உருவிலும் வளரவிடக்கூடாது.

ஒரு நாட்டின் அமைதிககு பயங்கரவாதிகள் அழிவைத் தேடுகிறார்கள் இதைரஷ்யா ஒரு போதும் அனுமதிக்காது

பயஙகரவாதத்தை உலக நாடுகள் அனைத்தும் முறியடிக்க வேண்டும்.

இவ்வாறு ரஷ்யதலைவர் கோர்பசேவ் கூறினார்.

மத்திய வெளி விவகாரத்துறை அமைச்சர் என்.டி.திவாரி, ரஷ்யவெளிவிவகாரத்துறை அமைச்சர் பிலோதேவ் மற்றும் இருநாட்டு அதிகாரிகளும் கலந்து கொண்டனர்.

முன்னதாக பிரதமர் ராஜீவ்காந்தியின் தகவல் ஆலோசகர் சாரதா பிரசாத் பத்திரிகையாளர் கூட்டத்தை தொடங்கி வைத்தார்,

இந்திய சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு கோர்ப்பசேவ் இன்றுமாஸ்கோவிற்குபுறப் பட்டார்.



### கோர்பசேவ் யோசனை: ராஜீவ் மகிழ்ச்சி

புதுடெல்லி, நவ. 28- இந்தியாவில் சாவதேச விண்வெளி ஆய்வு நிலையம் நிறுவலாம் என்ற கோர்பசேவ் யோசனையை பிரதமர் ராஜீவ்காந்தி பெரிதும்வரவேற்றுள்ளார்.

நிருபர்களின் கேள்விகளுக்கு பதிலளிக்கையில் பிரதமர் ராஜீவ் கூறியதாவது:

இந்தியாவில் சர்வதேச விண்வெளி ஆய்வு நிலையம் அமைக்கலாம என்ற கோர்பசேவ் யோசனை பெரிதும் வரவேற்கத்தக்கது.

இதுபற்றி விரிவான ஆலோசனைநடத்தப்படும்

சில வல்லரசுகள் இந்துமாகடல் பகுதியை அமைதிப்பகுதி ஆக்கும் முயற்சியை தடுக்க முயலுகின்றன

உலகம் பூராவும் அமைதி நிலவ வேண்டும் என்பதே இந்தியாவின் விருப்பமாகும்.

இந்திய- சோவியத்வர்த்தகம் மேலும் அதிகரிக்கும் 1992-ல் தற்போதுளள வர்த்தகத்தைப் போல இரண்டரை மடங்கு அதிகரிக்கும் என எதிர் பார்க்கப்படுகிறது.

இவ்வாறு பிரதமர் ராஜீவ் கூறினார்.

## புரட்சிதலைவரை வரவேற்பதில் அண்ணாநகர் படைத்தவரலாறு

சென்னை,நவ.28- முதல்வர் புரட்சித்தலைவரை வரவேற்பதில் அண்ணா நகர் புதிய வரலாறு படைத்தது.

ஏழை - எளிய மக்களின் அடிப்படைத் தேவைகளைப் பூாத்தி செய்துவரும் முதல்வர் புரட்சித்தலைவர் சென்னை மேற்கு அண்ணா நகர், வில்லிவாக்கம், கொளத்தூர், எருக்கஞ்சேரி, கொடுங்கையூர், திருவான்மியூர் ஆகிய பகுதிகளுக்கு குடிநீர் வசதி அளிக்கும் திட்டப்பணிகளையும் அரும்பாக்கம் (மேற்கு) பெரியார் நகர் ஆகியப்பகுதிகளுக்கு கழிவு நீர் அகற்றும் பணிகளுக்கான திட்டத்தை துவக்கிவைத்தும் புரட்சித் தலைவர் பொன்னுரை ஆற்றினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் பங்கேற்ற கோலாகல விழா நேற்று மாலை அண்ணாநகர் திருமங்கலம் சந்திப்பு பகுதியில் நடைபெற்றது.

### விழாக்கோலம்

முதல்வர் புரட்சித் தலைவர் வருகையையொட்டி அண்ணாநகர் பகுதியே விழாக்கோலம் பூண்டுகாட்சி அளித்தது.

முதல்வர் புரட்சித் தலைவரை வரவேற்பதில் நாங்கள் யாரும் சளைத்தவர்களல்ல என்று கூறும் விதத்தில் கழகத் தோழர்களும், பொதுமக்களும் முதல்வர் புரட்சித்தலைவர் அரசின் சாதனைகளை விளக்கும் கட் அவுட் மற்றும் கழகக் கொடி தோரணங்களாலும், மின் விளக்கு இரட்டை இலை அலங்காரங்களாலும் அண்ணா நகரையே அலங்கரித்திருந்தனர்.

### பிற்பகல் முதலே...

முதல்வர் புரட்சித் தலைவரைக் காணவும் அவரது பொன்னுரை கேட்கவும் பிற்பகல் முதலே விழா பொதுமக்கள் நடந்த இடத்திற்கு வரத் துவங்கினர். பொதுவாக அண்ணாநகர் பகுதி அடையாறு பகுதியினர் கூட்டத்திற்கு வருவதாக இருந்தால் கூட்டம் நடக்கும் நேரத்துக்குத்தான் வருவார்கள் ஆனால் இம்முறை புரட்சித்தலைவரைக் காண பிற்பகல் முதலே விழா நடந்த இடத்திற்கு வந்து அமரத்துவங்கினர்.

இந்த நிகழ்ச்சியில் பங்கேற்க முதல்வர் புரட்சித் தலைவர் வருவதை அறிந்து தாய்மார்கள் விழா துவங்க 7 மணி நேரத்திற்கு முன்பே வந்து அமர்ந்தது இதுவரை எந்தத் தலைவர் பங்கேற்ற நிகழ்ச்சிகளிலும்நடக்காதது என்று அந்தப் பகுதி மக்களே பேசிக் கொண்டனர்.

எந்த நேரத்தில் மழை வருமோ என்று இருந்த நேரத்தில் அதை சிறிதும் பொருட்படுத்தாது மக்கள் அமைதியாக இருந்து முதல்வரின் உரை கேட்டனர்.

இந்த விழாவில் பங்கேற்க முதல்வர் புரட்சித்தலைவர் 7 மணி அளவில் விழா மேடைக்கு வந்தார், முதல்வர் புரட்சித் தலைவர் வருவதைக்கண்ட மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்துபொன்மனச்செம்மல் வாழ்க! புரட்சித்தலைவர் வாழ்க! என்ற வாழ்த்து முழக்கங்களை எழுப்பினர்.

### முதல்வரின் தாயுள்ளம்

முதல்வர் புரட்சித் தலைவருக்கு கழகத் தோழர்களும், பொது மக்களும் மாலை அணிவிதது ஆசி பெற்றனர். ஒரு குழந்தை முதல்வருக்கு மாலை அணிவிக்க வந்தது. அந்தக் குழந்தையிடம் அன்புடன் மாலையைப் பெற்றுக் கொண்ட புரட்சித்தலைவர் தனக்கே உரித்தான தாயுள்ளத்துடன் அந்தக் குழந்தையை தன் மடியில் அமர்த்தி அன்புடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

முதல்வர் புரட்சித் தலைவரைக்காணவும், அவரது பொன்னுரை கேட்கவும் பல்லாயிரக்கணக்கான மக்கள் அண்ணாநகரில் திரண்டிருந்த காட்சி மாநாடோ என வியக்கும் வண்ணம் இருந்தது சென்னையும் புரட்சித் தலைவரின் கோட்டை ஆகிறது என்பதை பறைசாற்றும் வகையில் மக்கள் பெருந்திரளாகக் கூடி புரட்சித்தலைவரின் பொன்னுரை கேட்டனர்,

## புரட்சித்தலைவர் முன் கழகத்தில் சேர்ந்த தி.மு.க. யூனியன் சேர்மன்

சென்னை, நவ. 28- முதல்வர் புரட்சித் தலைவர் முன்னிலையில் அரவக்குறிச்சி ஊராட்சி ஒன்றிய பெருந் தலைவர் கே. சாமியப்பன் தி.மு க.விலிருந்து விலகி கழகத்தில் இணைந்தார்.

தி. மு, க, யூனியன் சேர்மன் சாமியப்பன் முதல்வர் புரட்சித் தலைவரின் இல்லத்துக்கு வந்து புரட்சித்தலைவர் முன் கழகத்தில் சேர்ந்தார் சாமியப்பனுடன் 200 தி மு. க. வினரும் அந்தக் கட்சியிலிருந்து விலகி கழகத்தில் இணைந்தனர்.

அங்கப்பன் கவுண்டன் வலசு தி மு க. செயலாளர் எஸ். ரங்கசாமி, சேந்தமங்கலம் முன்னாள் ஊராட்சி மன்றத் தலைவரும் தி மு க. பிரமுகருமான எஸ். கே முத்துசாமி, புதுப்பாளையம தி. மு.க பிரமுகர் எஸ். தங்கவேல், ஒளிக்காட்டூர் தி மு. க. பிரமுகர் கருப்பசாமி ஆகியோரும் தி. மு க.வில் இருந்து விலகி புரட்சித் தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

மொடக்கூர் மேல் பாகம் ஊராட்சி தலைவர் ஈஸ்வரமூர்த்தி, சேந்தமங்கலம் கீழ்ப்பாகம் ஊராட்சித் தலைவர் பி. தங்கவேல, கேலம்பாடி ஊராட்சி தலைவர் செல்லமுத்து, வட்டார காங்கிரஸ் உறுப்பினர் எம். பி. நல்லுசாமி ஆகியோர் காங்கிரசிலிருந்து விலகி புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர்.

அப்போது கழக எம். எல். ஏ. எஸ். ஜெகதீசன் பரமத்தி ஒன்றியப் பெருந்தலைவர் கந்தசாமிஒன்றியதுணைப் பெருந்தலைவர் ஆகியோரும் உடன் இருந்தனர்.

# கன்னியாகுமரி - திருச்சி
## மாவட்டங்களின்
# எம்.ஜி.ஆர். இளைஞர் அணி தோழர்களுக்கு

கன்னியாகுமரி - திருச்சி மாவட்டங்களின் ஒன்றிய-நகர அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக எம். ஜி. ஆர். இளைஞர் அணி நிர்வாகிகளாக கீழ்க்கண்டவர்கள் இன்று முதல் பணியாற்றுவார்கள்.

## கன்னியாகுமரி மாவட்ட ஒன்றிய-நகர நிர்வாகிகள்

### நாகர்கோவில் நகரம்

தலைவர்
என் டி விஜயகுமார் எம் ஏ எல், எல் பி

துணைத்தலைவர்
பாண்டியராஜ்
தெற்கு ரதவீதி, நாகர்கோவில்

செயலாளர்
பி எஸ் ராஜ்
அரசு சவுண்ட், வடசேரி

துணைச்செயலாளர்
பெ நாகலிங்கம் பி ஏ,
சாஸ்தான்கோவில் தெரு, கோட்டார்
நாகர்கோவில்

பொருளாளர்
இராமலிங்கம் பி ஏ,
சமரச விதி, கோட்டாறு அஞ்சல்

### பத்மனாபபுரம் நகரம்

தலைவர்
சுகுமார்,பி ஏ பி எல் ,
தக்கலை அஞ்சல், குமரிமாவட்டம்

துணைத்தலைவர்
இராமச்சந்திரன்
வாணியம் தெரு, பத்மனாபபுரம்

செயலாளர்
கே எஸ் மோகன் எம் ஏ
குழிக்கோடு அஞ்சல், தக்கலைவழி,

பொருளாளர்
பாபு, பி ஏ
ராமன்பரம்பு, தக்கலை அஞ்சல்,

### குளச்சல் நகரம்

தலைவர்
எஸ்,எம். பிள்ளை மீயன்னா, பி,ஏ.
இலப்பவிளை குளச்சல்

துணைத்தலைவர்
ஜெ சிலுவைதாசன்
துறைமுகத் தெரு, குளச்சல்

செயலாளர்
ப ஆண்ட்ருஸ் பி ஏ
கொட்டில்பாடு குளச்சல்

துணைச்செயலாளர்
மனோகரன், சோமு எம் சி
களிமார் குளச்சல் குமரி

பொருளாளர்
வி எம் எஸ் ஹமீது
இலப்பவிளை குளச்சல்

### குழித்துறை நகரம்

தலைவர்
எஸ்.ஜெயசந்திரன்,பி.ஏ
குழித்துறை அஞ்சல்,குமரி

துணைத்தலைவர்
சுந்தர்ராஜ்
இரும்புலியாபாரம் மார்த்தாண்டம்,

செயலாளர்
ஆர் எஸ் குமார் பி எஸ்ஸி.
ஸ்ரீரங்கபவன் நல்லூர், மார்த்தாண்டம் அஞ்சல்

துணைச்செயலாளர்
கே சிவகுமார் பி ஏ
சத்திரம்மடத்து வீடு,பெருந்தெரு,குழித்துறை,

பொருளாளர்
சுப்பையன்
மார்தாண்டம் அஞ்சல்

### கன்னியாகுமரி நகரியம்

தலைவர்
ஜே. பாபு
அலங்காரத் தெரு, கன்னியாகுமரி

துணைத் தலைவர்
ஜான் பிரான்லிஸ்
சின்ன முட்டம் கன்னியாகுமரி

செயலாளர்
ஏ முகமது உசேன் பி.ஏ
535 ஏ, மெயின் ரோடு, கன்னியாகுமரி

துணைச் செயலாளர்
பீட்டர்
ஆசாரிமார் தெரு, கன்னியாகுமரி

பொருளாளர்
ஆரோக்கியம்
வாவாத்துறை, கன்னியாகுமரி

### அகஸ்தீஸ்வரம் ஒன்றியம்

தலைவர்
தேவசகாயம்,
கொட்டாரம அஞ்சல்,குமரி.

துணைத்தலைவர்
ஸ்டீபன்,
மருங்கூர் அஞ்சல், கன்னியாகுமரி.

செயலாளர்
ஜே.இஸ்ரேல்,பி,எஸ்ஸி,எல். எல்.பி
மைலாடி அஞ்சல், குமரி.

துணைச் செயலாளர்
சுவாமிநாதன் பாஸ் பி ஏ
தெற்குதெரு, இரவிபுதூர் அஞ்சல்.

பொருளாளர்
சி முருகன்
தெற்குதாமரைகுளம்,தாமரைகுளம்அஞ்சல்.

### தோவாளை ஒன்றியம்

தலைவர்
நாஞ்சில் பி குமார் பி ஏ
ஆரல்வாய் மொழி, குமரி

துணைத்தலைவர்
அன்னை குமரேசன்
ஈசாந்திமங்கலம் அஞ்சல், குமரி மாவட்டம்.

செயலாளர்
இராமச்சந்திரன் பி எஸ்ஸி
வீராணமங்கலம் அஞ்சல் குமரி மாவட்டம்

துணைச்செயலாளர்
வஹாப்
திட்டிவிளை அஞ்சல் குமரி மாவட்டம்.

பொருளாளர்
எம் முத்துராஜ்
எட்டாமடை, அழகியபாண்டியபுரம், குமரி மாவட்டம்.

### இராஜாக்கமங்கலம்ஒன்றியம்

தலைவர்
ஆல்பின்,பி.ஏ ,
கேசவன் புத்தன் துறை அஞ்சல், குமரி மாவட்டம்.

துணைத்தலைவர்
பி,கண்ணன்பிஎஸ்ஸி
மேலபுத்தேரி,புத்தேரி அஞ்சல்.

செயலாளர்
மோகன்தாஸ்
மேலதார்மபுரம்,இராஜாக்கமங்கலம் துறை குமரி.

துணைச்செயலாளர்
சாம்ராஜ்
களியங்காடு,பார்வதிபுரம் அஞ்சல்.

பொருளாளர்
டாக்டர் ஜே சி டி பாபு
தெங்கம்புதூர் அஞ்சல்.

### குருந்தன்கோடு ஒன்றியம்

தலைவர்
ஒய். வியாகப்பன்,
செக்காரவிளை, குருந்தன் கோடு அஞ்சல்,

துணைத்தலைவர்
டி அய்யப்பன், பி ஏ.,
திருநயினார் குறிச்சி,
அம்மாண்டிவிளை அஞ்சல், குமரி.

செயலாளர்
ஆர் ஜே கே திலக், பி எஸ்ஸி, எல் எல் பி,
பருத்திவிளை, மண்டைக்காடு அஞ்சல், குமரி.

துணைச் செயலாளர்
மரிய அல்லேசி, பி ஏ,
புதூர், மண்டைக்காடு அஞ்சல்,

பொருளாளர்
ஜோசப் பிரடெரிக்
மேலபெரு விளை, பெருவிளை அஞ்சல்,

### தக்கலை ஒன்றியம்

தலைவர்
ஏ. அல்போன்ஸ் பி.ஏ.பி.எல்
மணலிக்கரை அஞ்சல், குமரி மாவட்டம்

செயலாளர்
செ. கண்ணப்பன் எம்.ஏ
குமாரபுரம் அஞ்சல், குமரி

துணைச்செயலாளர்
எஸ்.எஸ். ராஜா
திருவிதாங்கோடு அஞ்சல், குமரி

பொருளாளர்
ஜி. விஜயகுமார் பி.ஏ.
திருவிதாங்கோடு அஞ்சல், குமரி

### கிள்ளியூர் ஒன்றியம்

தலைவர்
ஜோனி லாசர் பி ஏ
ஆர் சி தெரு, உண்ணாமலை கடை அஞ்சல்,

துணைத்தலைவர்
எம் விஜயகுமார் பி ஏ
பம்மம்,மார்த்தாண்டம் அஞ்சல்,குமரி.

செயலாளர்
வில்பிரட் டானியல்
கல்லுநாட்டிவிளை,கருங்கல் அஞ்சல்,

துணைச்செயலாளர்
மில்லர் எம் ஏ
குறும்பனை அஞ்சல்,குமரி மாவட்டம்,

பொருளாளர்
எஸ் முருகன்
பாலப்பற்றம் அஞ்சல்,குமரிமாவட்டம்.

### மேல்புறம் ஒன்றியம்

தலைவர்
கலைக்கொடிசேம் எம் பி பி எஸ்,
ரோஸ் காட்டேஜ், பாகோடு அஞ்சல்

துணைத்தலைவர்
எம் ஜோசப் ஹோர்ட்
அம்பலக்கடை அஞ்சல், குமரி

செயலாளர்
ஜஸ்டின்
பேரை, திக்குறிச்சி

துணைச்செயலாளர்
ஜாஸ்பர்ஜோசப், பி ஏ பி எல்,
அனகாமூலை வீட, முழுக்கோடு அஞ்சல்

பொருளாளர்
வெல்தாஸ்
செங்குழிக்கரை,கடையாலுமூடு, கடையல்அஞ்சல்

### முஞ்சிறை ஒன்றியம்

தலைவர்
ஜி ராஜரெத்தினம் எம் ஏ
அரசகுளம் தேங்காப்பட்டணம் அஞ்சல்

துணை த்தலைவர்
வல்சம் ஹோஸ் பி ஏ
கிறாத்தூர் கடயரவீட நித்திரை விளை அஞ்சல்

செயலாளர்
ஜி இராதாகிருஷ்ணன் பிஎஸ்ஸி
குழிவிளை மெதுகும்மல் அஞ்சல்

பொருளாளர்
ஒயிட் குமார்
வள்ளவிளை குமரி

### திருவட்டார் ஒன்றியம்

தலைவர்
திலக்குமார் பி.ஏ.பி.எல்.
பிலாவிளை, கர்டாத்துறைஅஞ்சல்

துணைத் தலைவர்
எம்.சி. விஜயகுமார்
செறுப்பாலூர் அஞ்சல், குமரி மாவட்டம்

செயலாளர்
கே எஸ் குமார் பிஏ
அருமனை அஞ்சல், குமரி மாவட்டம்

துணைச் செயலாளர்
சி முருகன்
மணலிவிளை, குலசேகரம் அஞ்சல்,
குமரி மாவட்டம்

பொருளாளர்
ஆறுமுகப்பிள்ளை பி.ஏ
குதிரைப்பற்றி புத்தன் வீடு, திக்குறிச்சி அஞ்சல்

## திருச்சி மாவட்ட ஒன்றிய- நகர நிர்வாகிகள்

### ஆண்டிமடம் ஒன்றியம்

செயலாளர்
கே பன்னீர்செல்வம்
நாகம்பந்தல்அஞ்சல், கலரப்பாளையம்.

தலைவர்
ஜெகநாதன்,
குனாகம்அஞ்சல்,

பொருளாளர்
தமிழரசன்,
மருதூர் அஞ்சல்

துணைச்செயலாளர்
எஸ் சவுந்தரராஜன்,
அணிக்குறிச்சிஅஞ்சல் ஆண்டிமடம் வழி.

### செந்துறை ஒன்றியம்

செயலாளர்
எஸ் கோவிந்தன் பி எஸ்ஸி பி இடி
அசாவீரன் குடிக்காடு அஞ்சல். டி .14. மாத்தூர் வழி.

தலைவர்
ஆர் ஜமால் முகமது
மணிகைக்கடை,செந்துறை அஞ்சல்

பொருளாளர்
ஆர் பரமசிவம்நைனார்
துளார் அஞ்சல். அரியலூர் வட்டம்.

துணைச்செயலாளர்
த மதிநிறைச்செல்வம் பி காம்
பெரியார் குறிச்சிஅஞ்சல். அரியலூர் வட்டம்.

### அரியலூர் ஒன்றியம்

செயலாளர்
எஸ் பி குணசேகரன்
சீனிவாசபுரம் கல்லங்குறிச்சி அஞ்சல்.

தலைவர்
பி மாரிமுத்து
சடையபடையாட்சி தெரு, அரியலூர் அஞ்சல்,

பொருளாளர்
ஜி செந்தமிழ்செல்வன் பி எஸ்ஸி
கோப்பியங்குடிக்காடு. மணக்குடி அஞ்சல்,

துணைச்செயலாளர்
எஸ் அண்ணாதுரை பி ஏ
ஆனந்தவாடி அஞ்சல். திருச்சி மாவட்டம்.

### திருமானூர் ஒன்றியம்

செயலாளர்
டி ஆர் சுப்பிரமணியன்
தூத்தூர் அஞ்சல்,

தலைவர்
வெ நாகராஜன், பி ஏ
ஊராட்சி மன்றத்தலைவர் குலமாணிக்கம்

பொருளாளர்
பி பஞ்சநாதன்
திருவெங்கனூர், திருமானூர் அஞ்சல்,

துணைச்செயலாளர்
துரை புண்ணியமூர்த்தி
அரண்மனைகுறிச்சி அஞ்சல்

### கடவூர் ஒன்றியம்

செயலாளர்
எம் கருப்புசாமி
பாலவிடுதி அஞ்சல், வையம்பட்டி வழி.

தலைவர்
எம் பரமேஸ்வரன்
சின்னாண்டிபட்டி, காவியாளம்பட்டி அஞ்சல்,

பொருளாளர்
எம் குருசாமி
குரும்பப்பட்டி, பாலவிடுதி அஞ்சல்

துணைச் செயலாளர்
பி குமார சங்கர்
சங்கிப் பூசாரியூர், தரகம் பட்டி அஞ்சல்,

### ஜெயங்கொண்டம் ஒன்றியம்

செயலாளர்
பி வி சொக்கலிங்கம் எம் ஏ பி எல்
பெரியவளையம் அஞ்சல்.

தலைவர்
டி மோகன்
த-பெ தியாகராசன், ஜெயங்கொண்டம்

[3ம் பக்கம் பார்க்க]

## மேட்டூர் நீர் மட்டம்

திருச்சி நவ. 28- மேட்டூர் அணையில்இனறு 64 40 அடி தண்ணீர் இருந்தது அணையின் மொத்த கொள்ளளவு 120 அடி



# இந்தியாவில் சர்வதேச விண்வெளி ஆய்வு நிலையம்

புதுடெல்லி, நவ 28- இந்தியாவில் சர்வதேச விண்வெளி ஆய்வு நிலையத்தை நிறுவலாம் என சோவியத் தலைவர் கோர்பசேவ் யோசனை தெரிவித்துள்ளார்.

சோவியத் தலைவர் கோர்பசேவ் இந்திய நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூட்டத்தில் உரையாற்றினார்.

கோர்பசேவ் தனது உரையில் கூறியதாவது:-

விண்வெளித்துறையில் வளரும் நாடுகளுக்கு உதவ சர்வதேச விண்வெளி ஆய்வு நிலையம் ஒன்றை இந்தியாவில் நிறுவலாம்.

இந்த ஆய்வு நிலையம் வளரும் நாடுகளுக்கு உதவும் வகையில் விண்வெளி தொழில் நுப்பத்தை உருவாக்கலாம்

விண்வெளித்துறையில் முன்னணியில் இருக்கும் நாடுகளின் உதவியுடன் இந்த விண்வெளி ஆய்வு நிலையத்தை தொடங்கலாம்

### விண்வெளி போர்

விண்வெளி அணுஆயுத கட்டுப்பாடு மிக முக்கியமான விஷயமாகும்.

விண்வெளி போர் ஆயுத உற்பத்தி அபாயகரமான விஷயமாகும்.

ஐஸ்லாந்தில் ரெய்ஜாலிக் உச்சகட்ட மாநாட்டில் அமெரிக்காவின் விண்வெளி போர் ஆயுத உற்பத்தித் திட்டமே குறுக்கேநின்றது என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்,

விரிவான சர்வதேசபாதுகாப்புத் திட்டத்தை ஏற்படுத்துவதில் இந்தியாவும் சோவியத் ரஷ்யாவும் ஒருமித்த கருத்து கொண்டுள்ளது

அமெரிக்காவின் விண்வெளிப் போர் ஆயுத உற்பத்தியை மனிதகுலம் ஏற்காது.

அணுஆயுதபரிசோதனை அனைத்தும் நிறுத்தப்பட வேண்டும்என்ற இந்தியக் கருத்து வரவேற்கத்தக்கது ஆகும்.

கடல்களிலும் வானிலும் பயங்கர வாதத்தை ஒடுக்க சர்வதேச உடன்பாடு ஏற்படவேண்டும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு கோர்பசேவ் பேசினார்.

இதன் பிறகு பிரதமர் ராஜீவ்காந்தியும் சபாநாயகர்பல்ராம் ஜாக்கரும் பேசினர்.

இந்த நிகழ்ச்சியை டெலிவிஷன் நேரடியாக ஒளிபரப்பியது. வெளிநாட்டுத் தலைவர் ஒருவரின் நாடாளுமன்றப் பேச்சை டெலிவிஷன் நேரடியாக ஒளிபரப்பியது இதுவே முதல் தடவையாகும்.

### 10 அம்ச திட்டம்

முன்னதாக பிரதமர் ராஜீவ் காந்தியும் ரஷ்ய தலைவர் கோர்பசேவும் 10 அம்சத்திட்டம் ஒன்றில் கையெழுத்திட்டனர்

முழுமையான அணுஆயுத ஒழிப்பிற்கு அனைத்து நாட்டு மக்களையும் ஒத்துழைக்குமாறு இந்த ஒப்பந்தம் கேட்டுக் கொண்டுள்ளது.

## "ரிலையன்ஸ் பங்கு" வெளியீடு

சென்னை, நவ 28- "விமல்" துணிகளை உற்பத்தி செய்யும் பிரபல நிறுவனமான ரிலையனஸ் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் வருகின்ற 29ம் தேதி முதல் தனது "ஜி" வரிசை பங்கு முதலீட்டை வெளியிட உள்ளது.

பொது மக்களுக்காக வெளியிடப்படும் இந்த பங்குகளின்ஒவ்வொன்றின் மதிப்பும் ரூபாய்145ஆகும்.

பங்குகளை பெற விரும்புவோர்இதற்கான விண்ணப்பங்களை எல்லா விமல் ஷோரூம்களிலும் மற்றும் நிறுவனத்தால் நியமிக்கப் பட்டுள்ள எல்லா வங்கிகளிலும்பெற்றுக் கொண்டு தொகைகளை செலுத்தலாம்.

பொது மக்களுக்காக ஒதுக்கீடு செய்யப்படடுள்ள பங்குகள்மீது 13,5சதவிகித வட்டி அளிக்கப்படும் என இதன் நிதி நிர்வாகி நடராஜன் தெரிவித்தார்.

## மறைவு

சென்னை 46-வது வட்டம் மேட்னி ஐடியல் எம்.ஜி ஆர்.மன்றதலைவர் பக்கர் ஏ பரமசிவம் காலமானார்.

மதுசூதனன். காஜா, சுகுமார். எம்.ஏ காதர்,வி. கே கபூர், சேகர், எம்,பி. ஆனந்தன் ஆகியோர் இறுதி அஞ்சலி செலுத்தினர்.

## பரதநாட்டிய பள்ளி விழா

சென்னை. நவ 28 மயிலை ஸ்ரீ ஷண்முகானந்தா பரத நாட்டியப் பள்ளி 6 வது ஆண்டு விழாவும்கலைமாமணி"நாட்டிய கலாரத்னம்" தஞ்சை எம். அருணாசலம் நினைவஞ்சலி விழாவும் மயிலைரசிகரஞ்சனி சபாவில் சிறப்பாக நடந்தது.

இவ்விழாவிற்கு தமிழ்நாடுசட்டப்பேரவை சபாநாயகர் பி.எச்.பாண்டியன் தலைமை தாங்கி விழாவை ஆரம்பித்து வைத்து பேசினார்

நடனப் பள்ளி ஆசிரியர் ஜெயா அருணாசலம் ஆகியோரைப்பற்றி வழககறிஞர் கற்பக விநாயகம். சட்ட மன்ற உறுப்பினர் வளர்மதி, பாலன், டாக்டர் ஆறுமுக பாண்டியன் மற்றும் பலர் பாராட்டி பேசினார்கள்.

விழா ஆரம்பத்தில் டாக்டர் ஆறுமுக பாண்டியன் அனைவரையும் வரவேற்று பேசி மாலை அணிவித்தார் சட்டப் பேரவை சபாநாயக்கருககு பொன்னாடை போர்த்தினார். நடன ஆசிரியர் ஜெயா அருணாசலம் குமாரர் தஞ்சை ஹேம்நாத் நன்றி தெரிவித்துப் பேசினார். விழா முடிவில் நடனப்பள்ளி மாணவிகள் "அன்னை மூகாம்பிகை" என்ற நாட்டிய நாடகத்தை சிறப்பாக நடித்து பாராட்டுப் பெற்றார்கள்.

## திருவனந்தபுரத்தில் திரைப்பட விழா

கொச்சி, நவ. 28- 1988-ம் ஆண்டு நடைபெறும் திரைப்பட விழாவை நடத்த திருவனந்தபுரத்தைதேர்ந்தெடுத்ததற்காக மத்திய செய்தி ஒலி பரப்பு அமைச்சர் அஜித்பஞ்சாவுக்குகேரள திரைப்பட வர்த்தக சபை நன்றி தெரிவித்துள்ளது,

இதுதொடர்பாக மாநில முதல்வர் கருணாகரனுக்கும், திரைப்பட வாத்தக சபை நன்றி தெரிவித்துள்ளது,



## கற்பழிப்புக்கு உடந்தையான மனைவி - கணவனுடன் கைது

மதுரை, நவ. 28- மதுரையில்தன்சகோதரி மகளை தன் கணவன் கற்பழிக்கஉடந்தையாக இருந்ததாக கணவன்-மனைவி இருவரும்கைது செய்யப்பட்டனர்

மதுரை மகபூப்பாளையத்தை சேர்ந்த அன்சாரா நகரைசேர்ந்தவர் மைதீன் கான் வயது 52. இவருடைய 2வது மனைவி அனார்கலி வயது 25. அனார்கலியின் அக்கா மகள் குர்ஷித் பேகம்

அதிகாலை 3 மணிக்கு மைதீன்கானின் வீட்டில் குர்ஷித் பேகம் அலறும் சப்தம் கேட்டது. உடனே பக்கத்து வீட்டில் உள்ள மகபூப் பாட்சாவும் மற்றும் சிலரும் வீட்டுக்குள் நுழைந்தார்கள் அப்போது குர்ஷித் பேகத்தைமைதீன் கான்கற்பழித்துக்கொண்டு இருந்ததையும், அவள் சப்தம் போடாமல் இருக்கும் படி அனாரகலிகுர்ஷித் பேகத்தை அடித்ததாகவும் பார்த்தார்கள்.

குர்ஷித்பேகத்தைமகபூப் பாட்சாவும் மற்ற சிலரும் மீட்டு காவல் நிலையத்தில் ஒப்படைத்தனர். இதுபற்றி எஸ். எஸ் காலனி போலீசார் விசாரித்து வழக்கு பதிவு செய்து மைதீன் கானையும் கற்பழிக்க உடந்தையாக இருந்த அனார்கலியையும் கைது செய்தார்கள்,



# எம்.ஜி.ஆர். இளைஞர் அணி தோழர்களுக்கு... (2ம் பக்கத் தொடர்ச்சி)

பொருளாளர்
பி செல்வராஜ், பி ஏ,
கல்லாத்தூர் அஞ்சல்,

துணைச்செயலாளர்
த பிச்சைமுத்து
தேவர்மங்கலம் அஞ்சல்,

### டி. பழூர் ஒன்றியம்

செயலாளர்
கே சேகர் பி ஏ
அனைக்குடல் அஞ்சல்

தலைவர்
சுப்பிரமணியம் பி ஏ
அம்பாலூர் அஞ்சல்.

பொருளாளர்
எஸ் துரைராஜ்
தெற்குதாதம்பட்டி. டி பழூர் அஞ்சல்,

துணைச் செயலாளர்
ஆர் செந்தில்நாதன்
குணமங்கலம்

### ஆலத்தூர் ஒன்றியம்

செயலாளர்
சி கனகராஜி பி ஏ
நக்கசேலம் அஞ்சல்

தலைவர்
ஜி பன்னீர்செல்வம்
நொச்சிக்குப்பம் அஞ்சல்

பொருளாளர்
சி ராமகிருஷ்ணன் பி காம்
புதுக்குறிச்சி,காரை.

துணைச்செயலாளர்
ஏ பழனிமுத்து
பிலிமிசை,ராஜாஜி நகர்.

### பேரம்பலூர் ஒன்றியம்

செயலாளர்
எம் ரவிச்சந்திரன்
புதிய காலனி, துறைமங்கலம்

தலைவர்
பி பாலசந்தர்
பெரிய தெற்கு தெரு, பெரம்பலூர்

பொருளாளர்
எம் முத்துசாமி பி காம்,
லாடபுரம் அஞ்சல், பெரம்பலூர் வட்டம்

துணைச்செயலாளர்
பன்னீர்செல்வம் பி எஸ்ஸி,
சிறுவாச்சூர்

### வேப்பூர் ஒன்றியம்

செயலாளர்
டி சேகர் எம் எஸ்ஸி
எழுமூர் அஞ்சல் பெரம்பலூர்

தலைவர்
ஏ திருநாவுக்கரசு
கருப்பட்டாங்குறிச்சி வயலூர் அஞ்சல்

பொருளாளர்
சி குழந்தைவேல் பி எஸ்ஸி
கைபெரம்பலூர் வயலூர் அஞ்சல்

துணைச்செயலாளர்
என் ராமலிங்கம்
ஒகளூர் அஞ்சல்

### வேப்பந்தட்டை ஒன்றியம்

செயலாளர்
பூவை செழியன், எம்ஏ
பூலாம்பாடி அஞ்சல்,

தலைவர்
டி பெரியசாமி பி எஸ்ஸி
அ.குடிக்காடு அறுக்கர் அஞ்சல்.

பொருளாளர்
எஸ் ரெங்கராஜ்
வாலிகண்டபுரம் அஞ்சல்,

துணைச்செயலாளர்
ஆர் குமாரசாமி
துத்தப்பூர், வேப்பந்தட்டைவழி.

### பரமத்தி ஒன்றியம்

செயலாளர்
வி தங்கராசு பி ஏ பி எல்
பரமத்தி அஞ்சல்,

தலைவர்
கதிர்வேல்
பள்ளம்பாளையம் அஞ்சல், தென்னிலைவழி.

பொருளாளர்
எம் கே ஆர் குணசேகரன்
சின்னதாராபுரம் கரூர் வட்டம்

துணைச்செயலாளர்
ஆர் பிச்சைமுத்து
மேல காலப்பாளையம், பௌத்திரம் அஞ்சல்,

### தாந்தோனி ஒன்றியம்

செயலாளர்
எம் கே பழனியப்பன்
மூலக்காட்டாலூர்சனப்பிரட்டி, அஞ்சல்,

தலைவர்
கே ஜெகநாதன்,
அப்பிப்பாளையம்,

பொருளாளர்
பி இராமசாமி,
சின்னமாயக்கன்பட்டி,

துணைச்செயலாளர்
டி சுந்தரம்,
அருகமம்பாளையம்,

### மருங்காபுரி ஒன்றியம்

செயலாளர்
வேட்டை என். பழனிமலை, புதுப்பேட்டை அஞ்சல்

தலைவர்
இ ஏ முகம்மது உசேன்
துவரங்குறிச்சி

பொருளாளர்
கண்ணதாசன்
தொட்டியப்பட்டி

துணைச் செயலாளர்
ராசாராம் எம் ஏ
தெத்தூர்

### திருவெறும்பூர் ஒன்றியம்

செயலாளர்
பொன் ஜெயச்சந்திரன்
8வது தெரு காந்தி நகர்

தலைவர்
எம் லியாகத் அலி
1-44 உக்கடை, அரிமங்கலம்,

பொருளாளர்
காஜா மைதீன்
அக்பர் சாலை, துவாக்குறிச்சி,

துணைச்செயலாளர்
ஏ ரத்தினம் பி ஏ

### தாத்தையங்கார் பேட்டை ஒன்றியம்

செயலாளர்
பி சுப்பிரமணியன்,எம் ஏ ,
தேவானூர் பலூர்,
தேவனூர் அஞ்சல்,

தலைவர்
சி கிருஷ்ணசாமி, எம் ஏ,
அழகாப்பட்டி, எம் புதுப்பட்டி அஞ்சல்,

பொருளாளர்
எம் கண்ணுசாமி, எம் ஏ
அய்த்தான் பட்டி
மு. புதுப்பட்டி அஞ்சல்

துணைச் செயலாளர்
கே பி கிருஷ்ணன்,பி எஸ் ஸி,
கலிங்கப்பட்டி, முசிறி வட்டம்

### நோட்டியம் ஒன்றியம்

செயலாளர்
என் துரைராஜ்
8,கோட்டை மேடு அஞ்சல் தொட்டியம்வழி,

தலைவர்
எம் சுப்பிரமணியன் பி எஸ்ஸி
சீனிவாச நல்லூர் அஞ்சல் மணல்மேடுவழி

பொருளாளர்
கே வி பழனிவேலன்
கருப்பட்டி அஞ்சல்,தொட்டியம் வழி

துணைச்செயலாளர்
கே பதுமலை
49 தெற்கு முத்துவாகதெரு.
காட்டுப்புத்தூர் அஞ்சல்.

### முசிறி ஒன்றியம்

செயலாளர்
பிரின்ஸ்,தங்கவேல்,
7, பி சேலம் ரோடு, முசிறி அஞ்சல்.

தலைவர்
டி லோகநாதன் எம் எஸ் ஸி
தண்டலைபுதூர் அஞ்சல், முசிறி வட்டம்

பொருளாளர்
டி பி பூனாட்சி
நெய்வேலி கிளை, முசிறி வட்டம்

துணைச்செயலாளர்
போஸ் பி ஏ
புத்தனாம்பட்டி அஞ்சல், துறையூர் வட்டம்

கழக நிறுவனத் தலைவர்-
கழகப் பொதுச் செயலாளர்
இதயதெய்வம் மாண்புமிகு தமிழக முதல்வர்

## டாக்டர் புரட்சித்தலைவர்

அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது,

ஜே சி.டி.பிரபாகரன்
செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக
எம்,ஜி.ஆர் இளைஞர் அணி

சென்னை-14
28-11-86

[பிற ஒன்றியங்களின் தொடர்ச்சி நாளை]

# உலக மகாகவியின் பல்டிகள்

இந்தித் திணிப்பை எதிர்ப்பதில் தமிழகம் என்றைக்கும் வேகம் கொண்டதாக இருந்து வந்திருக்கிறது. தேவையான நேரத்தில்-அந்த எதிர்ப்பு அவசியம்தேவைப்படுகிறது என்று மக்கள் எண்ணுகிற கால கட்டத்தில் போராட்டம் நடத்தினால் மக்கள் அதனை ஏற்பர்.

ஆனால், இந்தி ஆணையை எதிர்த்து புரட்சித்தலைவா ஆக்கப்பூர்வமான நடவடிக்கை எடுத்து தமிழக மக்களுக்குபபிரதமரின் உறுதி மொழியைப் பெற்றுத் தந்த பின்னர், தேவையில்லாமல் கருணாநிதி இந்தி எதிர்ப்பு போராட்டத்தை துவக்கியுள்ளார்! அரசியல் லாபத்துக்கு இலங்கைத் தமிழா பெயரைச் சொல்லி ஆர்ப்பாட்டம் நடத்தி தமிழக மக்களால் புறக்கணிக்கப்பட்ட கருணாநிதி இலங்கைததமிழர் பிரச்சினையில் 'மவுசு' இல்லை என்று கருதி இந்தி பிரச்சினையை கையிலெடுத்தார்,

சினிமா எடுப்பவர்கள் படத்தில் தொய்வு ஏற்படுகிறபோது அந்த சீன்களில் ''கவர்ச்சி'' ஆட்டங்களைச் சேர்த்து. கலகலப்பு ஏற்படுத்துகிற மாதிரி, தனது அரசியலுக்கு சட்ட எரிப்பு போராட்டத்தை ''கவாச்சி'' ஆட்டமாகக் கருதினார்.

விழிப்புள்ள தமிழகத்துக்கு கருணாநிதியின் இந்தப்போக்கு எரிச்சலைத்தான் உண்டு பண்ணியுள்ளது.

வடமாநிலத்துக்காரர்களுக்கு எப்போதுமே தமிழகம் பற்றி ஒரு கருத்து உண்டு! இந்தி எதிர்ப்பு என்றால் தமிழகம் சிலிர்த்து எழும் என்று அங்கே உள்ளவர்கள் கருது கிறார்கள்!

கருணாநிதியின் கோமாளித்தனப் போராட்டத்தை தமிழக மக்கள் சட்டை செய்யாமல் விட்டு விட்டனர். வடக்கே உள்ளவர்கள் பூ... வெறும் பூச்சாண்டிதானா என்று இந்தி எதிர்ப்பு உணர்வையே கொச்சைப்படுத்துகிற மாதிரியான கேவலமான நிலைமையை கருணாநிதி ஏற்படுத்தி தமிழகத்துக்கு ஒரு நீங்காப் பழியை உண்டாக்கி விட்டார்.

சரி, சட்டம் எரிப்பிலாவது உறுதியாக இருக்கிறாரா கருணாநிதி!

அரசியல் சட்டம், தேசிய கொடி போன்றவற்றை அவமதித்தால் பதவியில் இருக்க முடியாது என்று அரசியல் சட்டம் கூறுகிறது.

கேரள அமைச்சர் பாலகிருஷ்ணபிள்ளை அரசியல் சட்டத்துக்கு முரணாகப் பேசினார் மந்திரிப் பதவி இழக்க நேரிட்டது.

பதவி போகிறது என்பதற்காக நான் அப்படிப் பேசவில்லை என்று பாலகிருஷ்ணபிள்ளை ''பல்டி'' அடிக்கவில்லை!

சட்டத்தை எரித்தால்எம்.எல்.ஏ. பதவி பறிபோய் விடும்.

அப்படித் தண்டனை பெற்றவர்கள் ஒரு வேளை வருங்காலத்தில் கூட தேர்தலில் நிற்கமுடியாமல் போய் விடும். ஏனெனில் 1970க்குப் பிறகு அப்படிப்பட்ட கடுமையான சட்டங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

கருணாநிதி உணர்ந்து கொண்டார் போலிருக்கிறது. நிலைப்படி சட்டத்தில் முட்டிக் கொண்ட பின் குனிகிறார்,

அதனால் தான் நேற்று முன்தினத்திலிருந்து அந்தர் பல்டி, ஆகாச பல்டி அடித்து வருகிறார் கருணாநிதி.

சேலத்தில் நிருபர்களிடம் பேசிய கருணாநிதி, ''சட்டத்தையா எரித்



தோம். வெறும் தாளைத்தானே எரித்தோம்'' என்று முதல் பல்டி அடித்தார்!

அப்புறம் போஸ்மைதானத்துக் கூட்டத்திலும் பல்டி.

இந்தி ஆட்சி மொழி என்ற வாசகத்தைத்தான் எரிக்கிறார்கள் என்று இரண்டாவது பல்டி!

அப்புறம் ''முரசொலி''யிலே பல்டி.

முரசொலியிலே பல்டி அடித்திருப்பது யார்? கருணாநிதி வகையறாவே பல்டி அடித்து விட்டது.

ஆம்! திமுக தலைமைக்கழக கம்பெனியே பல்டி அடித்து விட்டது!

சட்டத்தை எரிக்க மாட்டோம்! சட்டத்தின் பக்கமே தலை வைத்துப் படுக்க மாட்டோம்! சட்டத்தை எரித்தால் பதவி கிட்டாது! பதவி கிடைக்காவிட்டால் ஊரை கொள்ளை அடிக்க முடியாது என்று கருதுகிற கூட்டமல்லவா தி மு க கூட்டம்!

ஆகவே தான் சட்டத்தை எரிக்கிறோம் என்று முதலில் அறிவித்த கருணாநிதி கம்பெனியினர் ''எரியூட்டப்பட வேண்டிய வாசகம்'' என்று ''பேடி''த்தனமாக அறிவிப்பு வெளியிட்டுள்ளனர்.

சட்டத்தில் காணப்படும் வாசகத்தை எரிக்க சொல்லி தி.மு.க. தலைமை அறிவித்திருக்கிறதோ என்று படித்து பார்த்தால் அதிலே பெரிய ''பல்டி'' அடித்திருக்கிறார்கள்.

கீழேயுள்ள கட்டத்தில் (சட்டத்தில் அல்ல) காணப்படும் வாசகத்தை ஒரு தாளில் குறிப்பிட்டு எரிக்க வேண்டுமாம்!

அதாவது இந்த இந்தி எதிர்ப்பு புலீவேஷ ஆட்டக்காரர்கள் சட்டத்தை எரிக்கவில்லையாம்! வெறும் தாளைத்தான் எரிக்கிறார்களாம்!

தமிழக மக்களை எவ்வளவு ஏமாளிகளாக கருணாநிதி கருதிக் கொண்டிருக்கிறார் பாருங்கள்!

இந்த லட்சணத்தில் கருணாநிதி சபதமாம்! தமிழ் மொழி காக்க உயிரைத் தருவாராம்! இவர் உயிருக்கென்ன அவ்வளவு சக்தியா? பாவம் தமிழ்! கருணாநிதியால் இந்த அளவுக்கு கேவலப்பட்டு நிற்கிறது!

கருணாநிதியாரே! தமிழ் மொழி காக்க உயிரைத் தருவேன் என்ற பழைய 'டயலாக்' வேண்டாம் ஊரைக் கொளளை அடித்து கோடி கோடியாக சேர்த்து வைத்திருக்கிறீரே! அந்தப் பணத்தைக் கொடும்! தமிழுக்காக மேலும் திட்டங்கள் தீட்டுவோம்! ''உயிர்... தயிர் வசனம் இனி எடுபடாது!

- கார்த்திக் ராஜா



Edited and Published by K RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS - 600 029